Regd No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 6 பக்கம் விலை 45 காசு



**நியாயம்**

நியாயத்தை ஏற்போம். இடுக்கண்களைத் துடைப்போம், நீதியை நிலைநாட்டியே தீருவோம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**பகுத்தறிவு**

நான் உலகமே பகுத்தறிவு மயமாக வேண்டும் என்பதற்காகவே உயிர் வாழ்கிறேன்.

- தந்தைபெரியார்



மலர்: 7 சென்னை: 14 - 8 - 1983 ஞாயிறு வெளியூர்: 15 - 8 - 1983 திங்கள் இதழ்: 295

## புரட்சித் தலைவர் முன்னிலையில் கழகப் பொதுக்குழு ஆலோசனை

சென்னை, ஆக 14— அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுக்குழு இன்று (14ந் தேதி) காலை சென்னையில் கூடியது.

கழகத்தின் செயற்குழு இம்மாதம் 13ந் தேதியும் பொதுக் குழு 14ந் தேதியும்கூடும்என்றுஏற்கனவே அறிவிக்கப்பட்டிருந்தது தெரிந்ததே 4 அதன்படி நேற்று கழகச் செயற்குழு கூடியது இன்று காலை கழக நிறுவனத்தலைவர் புரட்சித்தலைவர்முன்னிலையிலும், கழக அவைத் தலைவர் ஈ. வெ. அ. வள்ளிமுத்து தலைமையிலும் நடந்த இந்தப் பொதுக்குழுக் கூட்டத்தில் தலைமைக் கழக நிர்வாகிகள், அமைச்சர்கள், பொதுக்குழு உறுப்பினர்கள் மற்றும் சிறப்புஅழைப்பாளர்கள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

இன்று காலை 11மணிக்குக் கூடிய கூட்டத்தில் பல முக்கிய பிரச்னைகள் குறித்து விவாதிக்கப்பட்டது. இன்று பிற்பகலிலும்பொதுக்குழுகூடுகிறது

## விடுமுறை அறிவிப்பு

சுதந்திர தினத்தை முன்னிட்டு 'அண்ணா' அலுவலகத்துக்கு நாளை (15ந் தேதி) விடுமுறை. எனவே 'அண்ணா' அடுத்த இதழ் 16ந் தேதி மாலை சென்னையிலும், 17ந் தேதி காலை வெளியூர்களிலும் கிடைக்கும்.

—நிர்வாகி

## சுதந்திர தின வாழ்த்து

'அண்ணா' வாசகர்கள், விற்பனையாளர்கள், விளம்பரதாரர்கள் மற்றும் அனைவருக்கும் எமது சுதந்திர தின வாழ்த்துக்கள்.

— ஆசிரியர்

## இலங்கைத் தமிழர் பிரச்னை பற்றி

## புரட்சித்தலைவருடன் - அமிர்தலிங்கம்

# 1 மணி நேர ஆலோசனை

**சென்னை, ஆக. 14- தமிழக முதல்வர் புரட்சித்தலைவரும், இலங்கைத் தமிழர் தலைவர் அமிர்தலிங்கமும் சென்னையில் ஒரு மணி நேரம் இலங்கைத் தமிழர் பிரச்சினை பற்றிப் பேசினார்கள்.**

அதனைத் தொடர்ந்து பிரதமர் இந்திராவைச் சந்திக்க அமிர்தலிங்கம் இன்று (ஞாயிறு) காலை விமானம் மூலம் டெல்லி புறப்பட்டுச் சென்றார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு தீர்வுகாண பிரதமர் இந்திராவும் தமிழக முதல்வர் புரட்சித் தலைவரும் தொடர்ந்து ராஜதந்திர ரீதியாக நடவடிக்கை எடுத்து வருகிறார்கள்.

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு மக்களின் ஆதரவினைத்தேட பல்வேறு வழிகளிலும் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் ஒரு பக்கம் இயக்கம்நடத்திவருகிறது.

இதர எல்லாக் கட்சிகளுடன் சேர்ந்து இன்னொரு பக்கம், விரிந்த இயக்கம் நடத்தி வருகிறது.

தமிழக முதல்வர் என்ற முறையில் புரட்சித் தலைவர் ராஜதந்திர ரீதியாகவும் நடவடிக்கை எடுத்து வருகிறார். ராஜதந்திர நடவடிக்கைகளை மையஅரசு தீவிரப்படுத்துவதற்கும் துணைபுரிந்து வருகிறார்.

### வரவேற்பு

இந்தச் சூழ்நிலையில் இலங்கைத் தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் நேற்றுஇரவு8 50மணிக்கு கொழும்பிலிருந்து விமானம்மூலம்சென்னை வந்து சேர்ந்தார்.

விமான நிலையத்தில் அவரை தமிழக அமைச்சரவையின் சார்பாக அமைச்சர்கள்ஆர்.எம்.வீ. பொன்னையன் ராஜாமுகமது ஆகியோர் வரவேற்றனர்.

சபாநாயகர் ராசாராம் மேலவைத் துணைத் தலைவர் புலவர் புலமைப்பித்தன் மேலவை உறுப்பினர் ஜனார்த்தனம் மணவைத் தம்பி சென்னையில் உள்ள இலங்கைத் தமிழர் பிரதிநிதிகள் ஆகியோரும் அமிர்தலிங்கத்தை வரவேற்றனர்.

தி.மு.கழகப் பொதுச் செயலாளர் அன்பழகனும் விமான நிலையத்திற்கு வந்திருந்தார்.

### பேட்டி

விமான நிலையத்தில் நிருபர்களிடம் அமிர்தலிங்கம் பேசினார்.

நேற்று அதிகாலை 3-மணிக்கு யாழ்ப்பாணத்திலிருந்து காரில் கொழும்புக்குப் புறப்பட்டேன். ஒரே பயணம். இடைவிடாத பயணம். விமானத்தைப் பிடிக்க முடியுமோ என்ற சந்தேகம் கூட இருந்தது. எப்படியோ விமானத்தைப் பிடித்து சென்னை வந்து சேர்ந்தேன் என்று அமிர்தலிங்கம் கூறினார்.

அதன் பின்னர் அவர் விமான நிலையத்திலிருந்து நேராக தமிழக முதல்வர் புரட்சித்தலைவரைச் சந்திக்க ராமாவரம் தோட்டத்திற்குச் சென்றார்.

இருவரும் ஒரு மணி நேரம் இலங்கைத் தமிழர் பிரச்சினை பற்றி பேச்சு வார்த்தை நடத்தினர்.

அதன் பின்னர் புரட்சித்

(3-ம் பத்தி பார்க்க)

(8ம் பத்தி தொடர்ச்சி)

தலைவருடன் அமிர்தலிங்கம் இரவு உணவு அருந்தினார்.

அவர் சென்னையில் தங்குவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் புரட்சித்தலைவர் செய்து இருந்தார்.

புரட்சித்தலைவருடன் பேச்சுவார்த்தை நடத்தியதைத் தொடர்ந்து பிரதமர் இந்திராவுடன் பேச்சு வார்த்தை நடத்த அமிர்தலிங்கம் இன்று (ஞாயிறு) காலை 6 மணிக்கு விமானம்மூலம் டெல்லி சென்றார்.

## இலங்கைத் தமிழர்கள் அனைத்து உரிமைகளுடன் வாழ்ந்திட ✶ அவர் தம் உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு கிடைத்திட

## ஈழத் தமிழர் நலனுக்கான நடவடிக்கைகளுக்கு உழைக்க

# உறுதி ஏற்போம்



## முதல்வர் புரட்சித்தலைவர் சுதந்திர தின செய்தி

**சென்னை, ஆக. 14- இலங்கைத் தமிழர்கள் அனைத்து உரிமைகளுடன் உயிர், உடைமைகளுக்கு பாதுகாப்புடன் வாழத் தேவையான நடவடிக்கைகளுக்காக உழைக்க நாம் உறுதி ஏற்போம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் தமது சுதந்திர தினச் செய்தியில் கூறியிருக்கிறார்.**

முதல்வர் புரட்சித்தலைவர் வெளியிட்டுள்ள சுதந்திர தின செய்தி வருமாறு:-

என்னை வாழ வைக்கும் தாய்மார்களே!

எனது நல்ல செயல்களைக் கண்டு ஆதரவு தரும் பெரியோர்களே!

என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே!

நமது தாய்த்திருநாடு விடுதலை பெற்று36ஆண்டுகள்நிறைவுற்று 37-வது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் இந்த நேரத்தில் நாட்டுமக்கள் அனைவருக்கும் என்னுடைய இதயம் நிறைந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த விடுதலைத் திருநாளை நாம் உள்ளத்தின் உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றிக் கொண்டாட வேண்டிய கடமை உடையவர்கள் ஆனாலும், நம்முடைய கவனமெல்லாம் அண்மையில் உள்ள இலங்கைத் தீவில் கொடுமைகளுக்கு ஆளாகி தவித்துக்கொண்டிருக்கும் நமது சகோதரர்களைச் சுற்றியே வட்டமிட்டு வருகிறது.

தமிழக மக்களின் மன உணர்வுகளுக்கு செயல் வடிவம் கொடுக்கின்ற வகையில் தமிழக அரசும், அரசின் அழைப்பை ஏற்ற அனைத்துக் கட்சிகளும் செயல்பட்டன என்பதையும் அதன் காரணமாக இலங்கைத் தமிழ் மக்களுக்கு ஆதரவாக ஒரு தேசிய கருத்து எழுந்திருப்பதையும், இருக்கின்ற நிலைமைகளுக்கு ஏற்ப நமது பிரதமர் இந்திராகாந்தி அவர்கள் இலங்கைத்தமிழர் துயர் தணிய உரிய முயற்சிகளில் ஈடுபட்டு வருவதையும் அனைவரும் அறிவார்கள்.

### இலங்கைத் தமிழர் பாதுகாப்பு

இலங்கைத்தமிழ்மக்கள்அனைத்து உரிமைகளோடு கவுரவமான முறையில் வாழ்ந்திடவும் இலங்கையில் தமிழ் பேசும் மக்களுடைய உயிருக்கும் உடைமைக்கும் மானத்திற்கும் பாதுகாப்புகிட்டிடவும் பாதிக்கப்பட்டமக்களின்மறுவாழ்விற்குவகை செய்யப்படவும் மத்திய அரசின் வாயிலாக தேவைப்படும் நடவடிக்கைகள் எடுக்க நாம் தொடர்ந்து கடமையாற்றுவோம்,

இதில் நமக்குள்ள பொறுப்பை செவ்வனே நிறைவேற்றுவோம் என்று நாம் உறுதி எடுத்துக்கொள்ள வேண்டும்.

பாதுகாப்புக்கும், வழி காட்டுதலுக்கும் தகுதி வாய்ந்த தலையான இடத்தைப் பெற்றுள்ள நமது நாட்டை மேலும் வலிமைமிக்கதாகவும் கட்டுக்கோப்பு மிக்கதாகவும் ஆக்க வேண்டிய பொறுப்பை நாம் உணர்ந்து பணிபுரிய வேண்டிய கட்டாயத்தைக் காலம் நமக்கு சுட்டிக்காட்டி இருக்கிறது.

அனைத்துமக்களுக்கும் சமஉரிமை—சம வாய்ப்பு-மதச் சார்பற்ற தன்மை ஆகிய கோட்பாடுகள் ஒரு நாட்டு மக்களாலும் ஆட்சியினராலும் கடைப் பிடிக்கப்பட வேண்டும்.

### வன்முறையை வெறுப்போம்

பிளவு மனப்பான்மையும் குறுகிய நோக்கமும் கொண்ட வன்முறை சக்திகளை ஒடுக்கி மக்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் கடமையை ஆட்சியில் உள்ளவர்கள் செம்மையுடன் நிறைவேற்ற வேண்டும்.

இந்த அம்சங்களை ஒருநாடு கடைபிடிக்கத் தவறினால் அதன் காரணமாக மக்களுக்கு எத்தகைய இன்னல்களும் இழப்புகளும் ஏற்படும் என்பதற்கு இலங்கை நிகழ்ச்சிகள் ஓர் எச்சரிக்கையாக அமைந்துள்ளன.

### தியாக தீபங்களைபோற்றுவோம்

வருங்கால தலைமுறையினர் உரிமையுடன் இன்பமான விடுதலை வாழ்வு வாழ்ந்திட தங்களது இன்னுயிரை காணிக்கையாக்கிய தீரமிக்க தியாகத் திலகங்களை இன்று நன்றியுடன் வணங்க கடமைப் பட்டுள்ளோம்.

பெயர் தெரிந்தும் தெரியாமலும் விடுதலைப் போராட்டத்தில் தங்களை ஈடுபடுத்திக் கொண்ட வீரப்பெருமக்கள் பெற்றுத்தந்த விடுதலையை என்ன விலை கொடுத்தாகிலும் காத்தே தீருவோம் என்று உறுதி ஏற்போம்.

விடுதலைப் போரை நடத்திய பாங்கு, வேற்றுமையில் ஒற்றுமை காத்திடும் நமது தனிப் பண்பு, மாபெரும் நாட்டை மக்களாட்சி தத்துவ அடிப்படையில் செலுத்திக் கொண்டு வருகிற சிறப்பு, அமைதியான திட்டமிட்ட வழிகள் வாயிலாக முன்னேற்றத்தை அடையும் நமது பயணம் இவற்றால் இந்தியத் திருநாடு உலக நாடுகளின் வரிசையில் தனியானதோர் இடத்தையும் மதிப்பையும் பெற்றுள்ளது. இத்தகைய தருணத்தில் இந்தியாவின் உண்மையான வலிமை அதன் மக்களுடைய சீரான முன்னேற்றத்தில் தான் அடங்கி இருக்கிறது என்பதை எவரும் மறுப்பதற்கில்லை.

எந்த ஒரு நாடும் சலியாத உழைப்பின்றி குறிக்கோள் இன்றி முன்னேற இயலாது. நாம் விடுதலை பெற்று 37 ஆண்டுகள் ஆன பிறகும் பல்வேறு துறைகளில் வளர்ச்சி பெற்ற பின்னரும் வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ள மக்களின் எண்ணிக்கை நம்நாட்டு மக்கள் தொகையில் சரிபாதி என்கிற உண்மையை நாம் மறத்தல் கூடாது

அப்படி நலிந்து கிடக்கும் மக்களை கைதூக்கி விடவில்லை என்றால் - அதற்கான பணிகளை விரைவாக செயல்படுத்தவில்லை என்றால்—மக்களாட்சித் தத்துவத்திற்கு பொருள் இல்லை என்றாகி விடும்.

### சமுதாயம் பற்றி நேரு கருத்து

''முன்னேறாமல்இருக்கிறஒருசமுதாயம் பலவீனமுற்றுவிடும். அந்த சமுதாயத்தின் ஆக்கப்பணிகள் அனைத்திலும் இந்த பலவீனத்தின் விளைவுகளே இடம் பிடித்து விடும்'' என்று அமரர் பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள் மெத்த பொருத்தமாகக் கூறினார்கள்.

அப்படியானால் முன்னேற்றத்திற்குஏற்பட்டுள்ள இடையூறுகள் எவை? வளர்ச்சிப்பாதையில் வைக்கப் பட்டுள்ள தடைக்கற்கள் யாவை என்பதை உணர்ந்து அவற்றை அகற்றுவதன் வாயிலாகத்தான் நாட்டின் உயர்வை உறுதி செய்ய முடியும்.

வன்முறையும், பிளவுசக்திகளுமே இன்றைக்கு எழுந்துள்ள மிகப்பெரிய தடைக் கற்கள்.

எந்த ஒரு பிரச்னையிலும் தீர்வு காண வன்முறை வழியை நாடுவதும், நாட்டின் ஒட்டு மொத்த நலனை விட ஒரு குறிப்பிட்ட பகுதி அல்லது கட்சியின் நலனே பெரிது என்று கருதும் மனப்பான்மையும் நாளடைவில் நம்மை சிதைத்து சீரழித்துவிடும் வன்முறைக்கும்பிளவுமனபான்மைக்கும் இடமில்லாத, இடம் தராத ஒரு உன்னதமான பொதுவாழ்வை உருவாக்குவோம்.

### அடித்தள மக்கள் நல்வாழ்வு

அடித்தள மக்களின் நல்வாழ்வுக்கு உத்தரவாதம் அளிக்கின்ற திட்டங்களுக்கு முதலிடம் தருவோம்.

சமுதாய ஒற்றுமைக்கான முயற்சிகளை விரைவுபடுத்துவோம். இந்த அடிப்படையான தேவைகளை நிறைவேற்றுவதன் வாயிலாக நமது நாட்டின் வலிமையைப் பெருக்குவோம்.

வலிமையும் ஒற்றுமையும் கட்டிக் காக்கப்படுகிற நிலையில் நம்நாடு திகழ்ந்திடுமேயானால் அதுவே வாழ்வற்று ஒதுங்கித் தவிக்கும் பிற மக்களுக்கு நல்லதொரு பாதுகாப்பாக இருக்கும் என்பதை அண்மைக்கால நிகழ்ச்சிகள் காட்டுகின்றன.

தன்னுடைய உரிமைகளுக்காக போராடமுயலும் எந்தக் கட்சி அல்லது தலைவர்களுக்கும் அற வழியில் செல்ல உரிமை உண்டு. ஆனால் தன்னுடைய எண்ணத்தை நிறைவேற்ற பொதுச் சொத்துக்களை அழிக்கவோ அல்லது உயிர்களை பலி வாங்கவோ எந்த ஒரு தலைவருக்கும் கட்சிக்கும் அமைப்பிற்கும் உரிமை கிடையாது என்பதை நாம் அனைவரும் உணர வேண்டும். அப்படிப்பட்டவர்கள் மக்களின் நல்வாழ்விற்கு எதிரான சமூக விரோதிகள் ஆவர்,

எவ்வளவு உன்னதமான கொள்கை இருப்பினும் பிறருக்கு தீங்கு விளைவிக்காத செயலில் ஈடுபடுபவர்கள்தான் தேசப்பற்று உள்ளவர்கள். சமூகத்தைப் பாதுகாப்பவர்கள் ஆவார்கள்.

இப்படிப்பட்ட உன்னத கொள்கைகளைக் கொண்ட நல்லவர்கள் தான் புதிய சமதர்ம சமுதாய கொள்கைகளை மக்களுக்கு தரமுடியும்.

அத்தகைய புதியஇந்தியாவை புதியதமிழகத்தை சமதர்ம சமத்துவ பாதையில் உறுதியோடு செலுத்த அயராது உழைப்போம்.

### தூய நோக்கம் கொண்டோரை ஓரணியில் சேர்க்கும் நாள்

இந்த தூயநோக்கம் கொண்ட அனைவரையும் ஒரே அணிவகுப்பாக கொண்டு வருவோம் எனும் குறிக்கோளுடன் தொண்டாற்ற இந்த ஆண்டின் விடுதலை திருநாள் நமக்கெல்லாம் உணர்வூட்டும் திருநாளாக அமைந்திடும் என்று நம்புகிறேன்; அமைந்திட வேண்டும் எனவிரும்புகிறேன்.

இந்திய விடுதலை வாழ்க!

நமது ஒற்றுமை முயற்சிகள் வெல்க!

சமத்துவ லட்சியம் வெல்க!

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்! வாழிய பாரத மணித்திருநாடு.

வாழ்க அண்ணா நாமம்!

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தமது செய்தியில் குறிப்பிட்டுள்ளார்.

PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMAN PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D. M. K. PERARIGNAR ANNA TRUST PRESS AT 34. NELSON MANICKAM ROAD MADRAS-600 029.

EDITOR: E. PARASURAMAN


# கவலை கப்பிய சுதந்திரதினம்

-: சிலம்புச்செல்வர் ம. பொ. சி. :-

தமிழகத்தை தன்னுட் கொண்ட நமது தாய் நாடான இந்தியப் பெருநாடு விடுதலை பெற்ற நாள், ஆகஸ்டுப் பதினைந்து:

''கதிரவன் அஸ்தமிக்காத சாம்ராஜ்யம்'' என்ற பெருமைக்குரியதாக இருந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் முதன் முதலில் கதிரவன் அஸ்தமிக்கத் தொடங்கியது, 1947 ஆகஸ்டு பதினைந்தில் தான்:

200 ஆண்டு காலமாக பாரதத்தைக் கவ்வியிருந்த அடிமையிருள் அகன்று, முதன்முதலாக சுதந்திரக் கதிரவன் உதயமான நாள், ஆகஸ்டு பதினைந்து.

அந்த நன்னாளை இந்த ஆண்டிலும் பாரத சமுதாயத்தினர் அனைவருமே ஒன்றுபட்டுக் கொண்டாடுகிறோம். ஒருமைப்பாட்டுணர்வோடு கொண்டாடுகிறோம்; ''எல்லோரும் ஓரினம்; எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் இந்நாட்டு மன்னர்'' என்று பாரதியார் பாடியது போல, ஐக்கிய மனப்பான்மையோடு கொண்டாடுகிறோம்.

## கண்ணீர் விடும் நேரம்

எதிர்பாராதவிதமாக, இந்த ஆண்டு ஆகஸ்டு 15-லே இந்தியத் தமிழரை மட்டுமல்லாமல் உலகெங்கும் வாழும் தமிழர் அனைவரையும் கவலை கப்பிக் கொண்டிருக்கிறது. நம்முடைய இரத்தமான உடன் பிறப்புக்களான இலங்கைத்தமிழர்கள் அங்குள்ள சிங்களவர்களால் இன்னலுறுவதற்காக நாம் எல்லோருமே கண்ணீர் விடுக்கும் நேரமிது!

அதனால் கடந்த ஆண்டுகளிலே கொண்டாடிய மகிழ்ச்சிப் பெருக்கோடு இந்த ஆண்டிலே தமிழக அரசும் சரி, தமிழின மக்களும் சரி; சுதந்திர நாளைக் கொண்டாடும் சூழ்நிலை இல்லை. ஆயினும், நாம் அழப் பிறந்தவர்கள் அல்ல? ஆளப் பிறந்தவர்கள். ஆளவும் செய்கிறோம்; ஆகவே பாரதப் பேரரசு இலங்கைத் தமிழர்களைக் காக்கும். அதற்கு தமிழக அரசும் ஆர்வத்துடன் கைகொடுக்கும். இதற்கான நம்பிக்கை ஒளியைக் காட்டுகிறது, ஆகஸ்டு 12-ல் பிரதமர் இந்திரா காந்தி நாடாளுமன்றத்தில் இரு அவைகளிலும் விடுத்த அறிக்கை. ஆகவே, கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ஆகஸ்டு பதினைந்தைக் கொண்டாடுவோம்.

## ஏழைகளின் ரட்சகர் எம்.ஜி.ஆர்.

அன்று வழக்கமான ஆடம்பர நிகழ்ச்சிகளைக் கைவிட்டு, சுதந்திரக் கொடியை வானளாவ உயர்த்துவோம்:

இது தமிழக முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர், அவர்கள் தமிழகமக்களுக்கு விடுத்துள்ளவேண்டுகோள் அவர் நாலரைக்கோடி தமிழரின் நாயகர்: பாரதப் பேரரசின் நம்பிக்கைக்குரிய நண்பர்; பசியாலும் பட்டினியாலும் வாடும் ஏழை எளியவரின் ரட்சகர் அதனால் அவருடைய அறிவிப்பை ஏற்று ஆகஸ்டு 15. ஐக் கொண்டாடுமாறு தமிழின மக்களை நானும் வேண்டுகிறேன்.

சிலருக்கு ஆகஸ்டு 15 துக்கநாளாகத் தோன்றுகிறது. அதனால், இந்த ஆண்டு ஆகஸ்டு 15ல் அவர்கள் துக்க நாள் கொண்டாடப் போகிறார்களாம்

1947 ஆம் ஆண்டிலே அறிஞர் அண்ணா அவர்கள் சொன்னார்கள், ''ஆகஸ்டு 15 இன்பத் திருநாள்'' என்று அவருடைய பொன்மொழியை ஏற்று, இந்த ஆண்டிலும் ஆகஸ்டு பதினைந்தைக் கொண்டாடுவோம்.

35 ஆண்டுகளுக்கு முன்பு - 1947 ஆகஸ்டு 15லே, பாரதப் பெருநாடு நமது தாய்த் திருநாடு- நமது முன்னோர் வாழ்ந்த பொன்னாடு சுதந்திரம் பெற்றில்லையானால், இலங்கைத் தமிழருக்கு சிங்கள அரசு இழைக்கும் கொடுமைகளைக் கண்டித்து பொது வேலை நிறுத்தத்தையும் பூரண கடையடைப்பையும் கூட்டு சேர்ந்து நடத்துகின்ற அரசு டில்லியிலோ, சென்னையிலோ இருந்திருக்குமா?

ஆகஸ்டு 15ல் தமிழகத்தோடு கூடிய இந்தியப் பெருநாடு பூரண விடுதலை பெற்றதன் விளைவாக வீராங்கனை டில்லியில் பிரதமர் பீடத்திலும் மாண்புமிகு எம். ஜி. ஆர். தமிழக முதல்வர் பீடத்திலும் அமர்ந்திருப்பதனால் தான் தொலைபேசி மூலம் ஜெயவர்த்தனாவை அழைத்து, 'தமிழினத்தவரைக் கொடுமைப்படுத்தப்படுவதைத் தடுத்து நிறுத்து' என்று இலங்கை அதிபருக்கு இந்தியப் பிரதமர் ஆணையிட முடிந்ததென்றால், அது ஆகஸ்டு பதினைந்தில் பெற்ற சுதந்திரத்தின் விளைவு தானே!

## தமிழர்கள் கோபத்துக்கு பதிலென்ன?

இந்தியத் தமிழ் மக்கள்- குறிப்பாக, தமிழர்கள் கோபாவேசம் கொண்டிருக்கிறார்கள். 'நடந்து வரும் கொடுமைகளுக்கு நீ கூறும் சமாதானம் என்ன?' என்று பிரதமர் இந்திரா, அதிபர் ஜெயவர்த்தனாவைக் கேட்க முடிந்ததென்றால், தனது அயல்துறை அமைச்சரை இலங்கைக்கு அனுப்ப முடிந்ததென்றால் அது ஆகஸ்டு பதினைந்தில் நாம்பெற்ற சுதந்திரத்தின் விளைவுதானே? அந்த நாளையா துக்க நாளாகக் கொண்டாடுவது?



''நீ யார் கேட்க? நான் பதில் சொல்ல?'' என்று ஆணவத்துடன் மறுப்புரைக்காமல் ''இதோ என் உடன்பிறப்பை அனுப்புகிறேன் அவருடன் பேசிசமரச உடன்படிக்கை காணுங்கள்'' என்று தொலைபேசியில் சொல்லி விட்டுஜெயவர்த்தனா தம்பியை அனுப்பினாரென்றால் அது ஆகஸ்டு 15ல் இந்த நாடு பெற்ற சுதந்திரத்தின் விளைவுதானே? அந்த புனித நாளையா துக்க நாளாகக் கொண்டாட வேண்டும்?

ஆகஸ்டு 15ல் பாரதப் பெருநாடு விடுதலை பெற்றில்லையானால், தமிழகத்திற்கெனத் தனியரசு- தமிழரசு- தோன்றியிருக்க முடியுமா! அந்தநாளையா துக்க நாள் என்பது?

ஆறு கோடி மக்களை அல்லலுறுத்திய தீண்டாமை கொடுமையை தண்டனைக்குரிய கிரிமினல் குற்றமாக்கி சட்டம் செய்திருக்கிறோமே அதை அமல்படுத்தியும் வந்திருக்கிறோமே, அது சாத்தியமாகி யிருக்குமா?

## வாக்குரிமை

ஆகஸ்டு 15-ல் நாடு சுதந்திரம் பெற்றதனால் தான் வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமைகிடைத்திருக்கிறது அதனால், பறையர்- பள்ளர் - குறவர் - மறவர் என்று சொல்லப்பட்ட தாழ்த்தப்பட்ட-பிற்பட்ட சாதியினர்களெல்லாம் மாநிலத்திலும் மத்தியிலும் அமைச்சராக வர முடிகிறது. அந்த நாளையா, துக்க நாளாகக் கொண்டாடுவது?

இருநூறு ஆண்டுக் காலமாக அங்கிங்கெனாதபடி எங்கெங்கும் ஆதிக்கம் பெற்றிருந்த ஆங்கிலத்திற்குப் பதிலாக எங்கும் எதிலும் தமிழ் மொழிக்கே இடம் தந்து வருகிறோமே, ஆகஸ்டு பதினைந்தில் நாடு சுதந்திரம் பெற்றில்லையானால், அது நடந்திருக்குமா?

## மறப்போம் மன்னிப்போம்

தமிழின மக்களே! நாம் தமிழர்கள் மட்டுமல்ல; இந்தியர்களுமாவோம்! அத்துடனன்றி, ஆகஸ்டு பதினைந்துக்கு முன்புநாம் அன்னியரால் ஆளப்பட்டோம். இன்று நாம் நம்மை நாமே ஆண்டு வருவோர் அதற்கு காரணம் ஆகஸ்டு பதினைந்துதான்!

மறப்போம், மன்னிப்போம். இலங்கைத் தமிழர்களின் கண்ணீரைத் துடைக்க அவசியப்பட்டால் நமது செந்நீரையும் வழங்குவோம் என்ற உறுதியோடு மாண்புமிகு எம்.ஜி ஆர். அவர்களை முதல்வராகக் கொண்ட தமிழக அரசோடு சேர்ந்து மூவண்ண சுதந்திரக் கொடியை வானளாவப் பறக்க விடுவோம். நாட்டின் விடுதலைக்காக உயிர் நீத்த வீரத் தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்துவோம். விடுதலை வீரர்களிலே இன்னமும் நம்முடன் உயிரோடு வாழ்ந்து வருவோருக்கு மதிப்பளித்து சுதந்திரத் திருநாளை அனைவரும் கொண்டாடுவோமாக!

தமிழகத்தில் படிக்கும்

# இலங்கைத் தமிழர் பிள்ளைகளுக்கு கழக அரசு உதவி

**சென்னை, ஆக. 14- தமிழகத்தில் தங்கிப் படித்து வரும் இலங்கைத் தமிழர்களின் பிள்ளைகளுக்கு வசதிக் குறைவு ஏற்படாமல் உதவி செய்ய கழக அரசு முன் வந்துள்ளது. இதற்கான உத்தரவையும் அரசு பிறப்பித்துள்ளது.**

இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்பட்டு வருகிறார்கள். சிங்கள வெறியர்கள் ராணுவம் மற்றும் போலீசார் உதவியுடன், தமிழர்களின் சொத்துக்களை சூறையாடி அழித்து ஒழித்து விட்டனர். நல்ல வசதியுடன் இருந்த ஆயிரக்கணக்கான தமிழர்கள் இன்று கொழும்புவில் உள்ள அகதிகள் முகாம்களில் அவதிப்படுகிறார்கள்.

இதைத் தொடர்ந்து தமிழகத்தில் உள்ள பள்ளிகள், கல்லூரிகள், தொழில்நுட்பக் கல்வி நிலையங்கள் முதலியவற்றில் படித்து வந்த இலங்கைத்தமிழ் மாணவ மாணவிகளும் பணஉதவியின்றி பெரும் அல்லலுக்கு ஆளாகியுள்ளனர்.

இந்த மாணவ மாணவிகளின் பெற்றோர் இலங்கையில்இக்கட்டான நிலையில் இருப்பதால் பண உதவியின்றி, இங்கே மிகவும் கஷ்டப்படுகிறார்கள்.

இலங்கையில் உள்ள இவர்களது பெற்றோர்களே உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கும்போது தமிழகத்தில் உள்ள அவர்களது பிள்ளைகளுக்கு பண உதவி செய்வது சாத்யம் இல்லை என்றும் தெரிகிறது.

இதை நன்கு உணர்ந்த புரட்சித்தலைவர் அரசு இலங்கைவாழ் தமிழர்களின் பிள்ளைகளுக்கு உதவி செய்ய முன்வந்துள்ளது. தமிழகத்தில் உள்ள இலங்கை வாழ் தமிழர்களின் பிள்ளைகளுக்கு உதவி செய்யும் ஏற்பாடுகளை கழக அரசு மேற்கொண்டுள்ளது. அதற்கான உத்தரவையும் அரசு பிறப்பித்துள்ளது.

தமிழ்நாடு சமூகநலத்துறை இயக்குனர் இது குறித்து உடனடி நடவடிக்கை எடுக்கும்படி அரசு ஆணை பிறப்பித்துள்ளது, அதன்படி தமிழகத்தில் தங்கிப் படிக்கும் இலங்கைவாழ்தமிழர்களின் பிள்ளைகளுக்கு தேவைப்படும் பண உதவி செய்யப்படும்.

## விவரம் அறியப்படும்

இலங்கையில் உள்ள பெற்றோர் அல்லது பாதுகாவலர் ஆகியோரிடம் இருந்து பண உதவி பெறாத பிள்ளைகள் மற்றும் தடங்கல் ஏற்பட்டு பலவிதத்தில் உதவி பெறாத மாணவ மாணவியர்களின் விவரங்களை சேகரிக்குமாறும் அரசு உத்தரவிட்டுள்ளது. இன்னலுக்கு ஆளாகியுள்ளஇலங்கைவாழ்தமிழர்களின் பிள்ளைகள் பற்றிய முழுமையான தகவல்களும் சேகரிக்கப்படுகின்றன.

தமிழகத்தில் தங்கிப் படிக்கும் இலங்கை வாழ் தமிழர்களின் பிள்ளைகளுக்கு எந்த அளவுக்கு உதவி தேவைப்படும் என்ற ஆய்வையும் சமூக நலத்துறை மேற்கொண்டிருக்கிறது.

இலங்கைத் தமிழருக்குதவ

## எழும்பூர் ரயில் நிலையத்தில் உதவி நிலையம்

சென்னை, ஆக. 14— இலங்கையில் இருந்து வரும்தமிழர்களுக்கு உதவுவதற்காக எழும்பூர் ரயில் நிலையத்தில்ஒருதனிஉதவி நிலையம் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

சென்னை மாவட்ட ஆட்சித்தலைவரால் இந்த நிலையம் அமைக்கப்பட்டுள்ளது.

இலங்கையிலிருந்து வரும் தமிழர்கள் இந்த நிலையத்தில் தொடர்பு கொள்ளலாம் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

# கழக செயற்குழு தீர்மானம் ... (4-ம் பக்கத் தொடர்ச்சி)

தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

## மத்திய அரசுக்கு வற்புறுத்தல்

அண்மையில் நடைபெற்ற இலங்கைத் தமிழர்கள் இனவெறிக் கொலைகளுக்கு தனது ஆழ்ந்த கவலையைத் தெரிவித்து உடனடியாக வெளிவிவகாரத்துறை அமைச்சரை இலங்கைக்கு அனுப்பியும், இலங்கை அதிபருடன் நேரடித் தொடர்பு கொண்டும் தமிழ் அகதிகளைப்பாதுகாப்பான இடங்களுக்கு கொண்டு செல்ல கப்பல்களை அனுப்பியும், அவதியுறும் தமிழ்அகதிகளுக்குத் தேவையானஉணவு, உடைகள், மருந்துபொருள்களை விமானம் மூலமும், கப்பல்மூலமும்அனுப்பியும், தமிழகத்தில் அனைத்துக் கட்சிகளும் நடத்திய முழு அடைப்புக் கண்டன நாளில் இந்திய வரலாற்றிலேயே முதன் முறையாக மத்திய அரசும் இணைந்து செயல்பட்டு புகை வண்டிகளையும், விமானங்களையும் ஓடாது செய்து மத்திய அரசுத்துறை நிறுவனங்களையும் முழு அடைப்புச் செய்ய வைத்தும், தமிழகத்தின் அனைத்துக்கட்சி குழுவினரின்கோரிக்கைகளை ஏற்று தக்க நடவடிக்கைகளை எடுக்க உறுதி அளித்தும், தமிழ் மக்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்பளித்த மத்திய அரசின் இன்றைய போக்கினை இச்செயற்குழு வரவேற்கிறது.

இப்புதிய உணர்ச்சி வேகம்மங்கி மழுங்கிவிடாது, இலங்கைத் தமிழர்களின் மனித உரிமைகள் நிலையாகப் பாதுகாக்கப்படவும், பல்லாண்டுகளாகத் தீர்க்கப்படாது தொடரும் இலங்கைத் தமிழர்களின் பிரச்சினைகளுக்கு நிரந்தரத் தீர்வு காணவும் எதிர்காலத்தில் இது போன்ற இனப்படுகொலைகள் நடைபெறாதிருக்க இறுதியான தீர்வு ஏற்படவும், மத்திய அரசு எல்லாவிதமான நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும் என்று இச்செயற்குழு வற்புறுத் தி

(1ம் பத்தி பார்க்க)

(8ம் பத்தி தொடர்ச்சி)

கேட்டுக் கொள்கிறது.

## அண்ணா உருவத்துடன் கருஞ்சட்டை அணிவீர்

இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் அறிவித்துள்ளபடி இலங்கை அதிபர் இலங்கைத் தமிழர் தலைவர்களுடன் நேரடிப் பேச்சுவார்த்தை நடத்தியும் இலங்கைத் தமிழர்களின் நலன் காக்கும் வகையில் அவர்களது பிரச்னைகளுக்கும், அவர்களது உயிர் உடைமைகளுக்கும்பாதுகாப்புத்தரும் வண்ணம் நிரந்தரத் தீர்வு காண வேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காக அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத் தோழர்கள் அனைவரும் ஆகஸ்டு 16-ஆம் தேதி முதல் செப்டம்பர் 14-ஆம் தேதி வரை கருப்புச்சட்டை அணியவேண்டும் என்றும், அறிஞர் அண்ணாவின் உருவம் உள்ள சின்னம் அணிய வேண்டும் என்றும், அதற்குள் இலங்கைத் தமிழர்களின் பிரச்னைகளுக்கு நல்ல முடிவு ஏற்படாவிட்டால் மீண்டும் செப்டம்பர் மாதம் 19-ஆம்தேதியன்று பொதுக்குழு கூட்டி மேல் நடவடிக்கைகள் பற்றி முடிவு எடுப்பது என்றும் இச்செயற்குழு தீர்மானிக்கிறது.

## தியாகிகள் குடும்பம்: கழகம் காக்கும்

சிங்களத்தில் உள்ள சிறையில் பலியுண்ட தமிழர் தளபதிகளான தங்கதுரை- குட்டிமணி ஆகியோரின் குடும்பங்கள் தமிழகத்தில் உள்ளன. அந்தக் குடும்பங்களைக் காப்பாற்றவும், அவர்களது குழந்தைகளைப் படிக்க வைத்து ஆளாக்கவுமான முழுப் பொறுப்பை அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஏற்றுக் கொள்கிறது.

## ஜெயவர்த்தனேக்கு கடும் கண்டனம்

இலங்கையில் மனித உரிமைகளுக்காகப் போராடும் அனைத்துத் தமிழர்கள் மீது சிங்கள வெறியர்களும், வெறிபிடித்த சிங்கள இராணுவத்தினரும் நடத்திய இனவெறிப் படுகொலைக்குக் காரணமான ஜெயவர்த்தனேயின் லங்கை அரசுக்கு இச்செயற்குழு தனது கண்டனத்தைத் தெரிவிக்கிறது. குடிமக்களைக் காக்கவேண்டியஅரசு இயந்திரம் தமிழர்களின் இரத்தத்தை உறிஞ்சும்-உரிமைகளைச் சூறையாடும் சிங்கள வெறியர்களுக்கு, உறுதுணையாக இருந்த ஜெயவர்த்தனே அரசின் காட்டுமிராண்டித்தனமான செயலை இச்செயற்குழு வன்மையாகக் கண்டனம் செய்கிறது.

இவ்வாறு நேற்று நடைபெற்ற கழகச் செயற்குழுக் கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**இலங்கை சிறையில் பலியான தமிழர் தளபதிகள்**

## குட்டிமணி - தங்கதுரை குடும்பங்களை

# கழகமே காக்கும்

### கழகச் செயற்குழு தீர்மானம்

**'ஈழத்தமிழர் உயிர் உடைமைக்கு பாதுகாப்புக் கோரி ஆகஸ்டு 16 முதல் செப்டம்பர் 14 வரை கருஞ்சட்டை அணிக'**

**சென்னை, ஆக, 14-இலங்கைச் சிறையில் படுகொலை செய்யப்பட்ட தமிழர் தளபதிகளான குட்டிமணி, தங்கதுரை ஆகியோரின் குடும்பங்களைக் காப்பாற்றும் பொறுப்பை அனைத்திந்திய அண்ணா தி. மு, கழகம் ஏற்பதென்று கழகச் செயற் குழுவில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.**

**ஈழத்தமிழர்களின் உயிர்களுக்கும் உடைமை களுக்கும் பாதுகாப்புத்தர வற்புறுத்தி இம்மாதம் 16-ந் தேதி முதல் செப்டம்பர் 14 ந் தேதி வரை கழகத்தினர் அனைவரும் அண்ணா உருவச் சின்னத்துடன் கறுப்புச்சட்டை அணிவதெனவும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.**

சென்னையில் நேற்று கூடிய கழகச் செயற்குழு வில் நிறைவேற்றப்பட்ட தீர்மான விவரம் வருமாறு;

### அனுதாபத் தீர்மானம்

இலங்கை வாழ் தமிழர்களின் உரிமைகளுக்காகப் போராடி, இலங்கை இராணுவத்தினராலும், சிங்கள இனவெறியர்களாலும் படுகொலைக்கு ஆளான தமிழர்களுக்கு இச்செயற்குழு தன் வீர அஞ்சலியைச் செலுத்துகிறது.

இலங்கையில் மனித உரிமைகளுக்காகவும், தமிழினத்தின் பாதுகாப்பிற்காகவும் போராடிப் பல கொடுமைகளை அனுபவித்து சிறைப்பட்டிருந்த குட்டிமணி, செகன், தங்கதுரை போன்ற ஐம்பதுக்கும் மேற்பட்ட விடுதலை வீரர்கள் சிங்களக் கைதிகளால் மிகமிகக்கொடூரமான முறையில் படுகொலை செய்யப்பட்டதை இச்செயற்குழு வன்மையாகக் கண்டிப்பதோடு, உயிர்துறந்த அம் மாவீரர்களுக்கு வீரவணக்கம் செலுத்துகிறது.

இலங்கையில் இராணுவத்தினர்–சிங்கள வெறியர்கள் ஆகியோரின் கொடுமைகளுக்கு ஆளாகிப் படுகொலை செய்யப்பட்டு உயிரிழந்தவர்களின் குடும்பத்தினர்க்கும், படுகாயமுற்று அவதிகளுக்கு உள்ளாகியிருக்கும் தமிழ்ப்பெருங்குடிமக்களுக்கும், வீடிழந்து–தொழிலிழந்து–பணிமனையும் தொழிற்சாலைகளையும் இழந்து, சொத்துச் சுதந்திரமிழந்து தவித்திடும் மக்களுக்கும் இச்செயற்குழு தன் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

### இரங்கல் தீர்மானம்

திரு. எம் ஆர். வெங்கட்ராமன் (சி.பி.எம்.)
திரு க, திரவியம்
திரு. கேதார்பாண்டே
திரு. பிலுமோடி எம்.பி
திரு. கதிர்வேலு (புதுவை முன்னாள் அமைச்சர்)
திரு. பி எஸ். இராமையா-தமிழ் எழுத்தாளர்

இலங்கைத் தமிழர் கொலைகளைக் கண்டித்து கோலார் தங்க வயலில் நடைபெற்ற ஊர்வலத்தில் துப்பாக்கிச் சூட்டால் இறந்த
திரு. ஜெயக்குமார்
திரு. சண்முகம்

மற்றும்

| | |
|---|---|
| திரு. மாணிக்கவாசக ரெட்டியார் | புதுவை கழக முன்னாள் அமைச்சர் |
| திரு. டிரைவர்இராதா | கழக உறுப்பினர் |
| திரு. அய்யாசாமி | மதுரை 54-வது வட்ட மன்ற செயலாவர் |
| திரு. இராதா | மதுரை 2 வது வட்டப் பிரதிநிதி |
| திரு. கம்பர் | பொன்னமராவதி நகர துணைச் செயலாளர் |
| திரு. முத்து | புதுக்கோட்டை முன்னாள் நகரமன்றத் தலைவர் |

இலங்கைத் தமிழர்களுக்காக இராசபாளையத்தில், திருச்செங்கோட்டில் தீயிட்டு உயிர் நீத்த
திரு. சுப்பிரமணியன்
திரு. கணேசன்

ஆகியோர் குடும்பங்களுக்கு இச்செயற்குழு

(3-ம் பக்கம் பார்க்க)